


# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை

SHIVAJI
TAMIL WEEKLY
33rd year
of Publication
4—2—1968


# மதச்சார்பற்ற இந்தியக் குடியரசு

பதினெட்டு ஆண்டுகள் நிறைந்துள்ள இந்திய குடியரசுக்கு மதச்சார்பின்மை என்பது ஒருவாழ்வு முறையே ஆகும். மதச்சார்பற்ற ஜனநாயக நாடாக இருக்க 1950-ம் ஆண்டு ஜனவரி மாதம் 26-ந் தேதி நாடு முடிவுசெய்தபோது, அம்முடிவு நாட்டின் விருப்பத்தையும், வெகுகாலமாக இருந்துவரும் ஆழ்ந்த உணர்வின் நிறைவேற்றத்தையுமே பிரதிபலித்தது.

நெருக்கடியான காலங்களில், மதச்சார்பற்ற இந்திய அரசியல் அமைப்பு பாதிக்கப்படாமல் இருந்ததோடு, மேலும் வலுவுடனும், துடிப்புடனும் இயங்கியது. சுதந்திர இந்தியாவுக்கு மதச்சார்பற்றத் தன்மை ஒரு தனிச்சிறப்பையே அளித்தது.

அரசாங்கம், மதம், தனிநபர் ஆகியவற்றுடன் சம்பந்தப்பட்ட உறவுகளின் அடிப்படையில் மதச்சார்பற்ற இந்தியா உருவாகியிருக்கிறது. மதத்திற்கும், தனிநபருக்கும் இடையேயான உறவு (மத உரிமை,) அரசாங்கத்திற்கும் தனிநபருக்கும் இடையேயான உறவு (பிரஜா உரிமையும், கடமையும்,) அரசாங்கத்திற்கும் மதத்திற்கும் இடையேயான உறவு (இரண்டும் தனித்து நிற்பது) ஆகிய இவையே மதச்சார்பற்ற தன்மையின் அடிப்படையாக விளங்குகின்றன.

இவ்வுறவுகள் பற்றி அரசியல் சாஸனம் பூரணமாக விவரித்திருக்கிறது. தனி மனிதனின் மத உரிமைக்கும், பொதுவான நம்பிக்கைகள் பழக்க வழக்கங்களையுடைய நபர்களின் சங்கங்களுக்கும் அரசியல் சாஸனம் வகைசெய்திருக்கிறது. இந்த உரிமை சம்பந்தமான அடிப்படை உத்திரவாதத்தை அரசியல் சாஸனத்தின் 25(1)-ஆவது ஷரத்து அளிக்கிறது.

பொது ஒழுங்கு, அறநெறி, ஆரோக்கியம் முதலியவற்றுக்கு உட்பட்ட வகையில் ..............கருத்துச் சுதந்திரமும், எந்த மதத்தையும் தடையில்லாமல் பின்பற்றுவதற்கும், மதப் பிரசாரம் செய்வதற்கும் ............ எல்லா நபர்களுக்கும் சம உரிமை உண்டு என்று அரசியல் சாஸனம் ஷரத்து கூறுகிறது.

கலாசாரத்துறையில் சிறப்புறப் பணியாற்றுவதுடன், மதச் சார்பற்ற நாட்டை உருவாக்குவதில் சிறுபான்மையிலுள்ள மதப் பிரிவினர்கள் முக்கியப் பங்கு ஆற்றி வருகிறார்கள். இந்தியக் குடியரசின் ஆரம்ப ஆண்டுகளிலிருந்து பல மதப் பிரிவுகளைச் சேர்ந்தவர்கள் தடையேதுமின்றி வாழ்ந்து, கிடைத்த வாய்ப்புக்களை நன்கு பயன்படுத்திக் கொண்டு தாய்நாட்டிற்கு சிறப்பாக உழைத்து, புகழையும், உயர் அந்தஸ்தையும் அடைந்திருக்கிறார்கள்.

இந்திய ஜனத்தொகை 1961-ம் வருடத்திய சென்ஸஸ்படி 43.9 கோடியாகும். இதில் 36.6 கோடியினர் இந்துக்கள். 4.7 கோடியினர் முஸ்லீம்கள். கிறிஸ்துவர்கள் 1.1 கோடியும், சீக்கியர்கள் 80 லட்சமும் புத்தமதத்தினர் 30 லட்சமும், ஜைனர்கள் 20 லட்சமும் இருக்கிறார்கள். இது தவிர, குறைந்த எண்ணிக்கையில் பார்சீகர்களும், யூதர்களும், இதர மதத்தினரும் இருக்கிறார்கள்.

டாக்டர் ஜான் மதத்தாய், ஸ்ரீ ரஃபி அஹமத் கித்வாய், மௌலான அபூல் கலாம் ஆஸாத், சர்தார் பல்தேவ் சிங், ஸ்ரீ எம். சி. சாக்ளா ஸ்ரீ ஹூமாயுன் கபீர், ஸ்ரீ பக்ருதீன் அலி அஹ்மத், ஸ்ரீமதி வயலட் அல்வா, ஸ்ரீ ஸ்வரண் சிங் ஆகியோர் மத்திய மந்திரி சபையில் பணியாற்றிய சிறுபான்மை வகுப்பைச் சேர்ந்த புகழ் பெற்ற தலைவர்கள் ஆவார்கள்.

இந்தியா சுதந்திரம் அடைந்ததிலிருந்து பொது வாழ்வில் சிறுபான்மை வகுப்பைச் சேர்ந்த பலர் முக்கிய பங்கு ஆற்றியிருக்கிறார்கள். தற்போது ராஷ்டிரபதியாக இருக்கும் டாக்டர் ஸாகிர் ஹூஸேன், ஸ்ரீ ப்ராங்க் அந்தோணி, ஸர்தார் ஹூகம் சிங், சந்த் பத்தே சிங், ஸ்ரீ பெரோஸ் காந்தி, ஸ்ரீ தியாப்ஜி, ஸ்ரீ ஜே. ஆர். டி. டாட்டா, ஸ்ரீ எஸ். பி. மோடி, ஸ்ரீ ஹெச். ஜே. பாபா, பேராசிரியர் முஜீப், ஸ்ரீ சயத் பாஸஸ் அலி ஆகியோர் இந்தியாவின் பொது வாழ்வில் முக்கியப் பங்கு வகித்திருக்கிறார்கள்.

தற்போதைய இந்தியாவில் சிறுபான்மையினரின் நிலை குறித்து நன்கு புரிந்து கொள்ள வேண்டுமானால், அரசியல் சாஸனம் அவர்களுக்கு அளித்துள்ள பாதுகாப்பை கவனிக்க வேண்டியது முக்கியமாகும். தங்களுக்கென தனியான மொழி, எழுத்து, அல்லது கலாசாரம் ஆகியவற்றைக் கொண்டுள்ள இந்தியாவின் எந்தப் பகுதியில் வாழும் பிரஜைக்கும் அவற்றைப் பாதுகாப்பதற்கான உரிமையையும், மதம், ஜாதி, இனம், மொழி ஆகிய எவற்றின் காரணமாகவும் அரசாங்கம் நடத்தும் கல்வி ஸ்தாபனங்களிலும், அரசாங்கத்தின் உதவியுடன் இயங்கும் கல்வி ஸ்தாபனங்களிலும் எந்தப் பிரஜைக்கும் அனுமதி மறுக்கப்பட மாட்டாது என்றும் உரிமையையும் அரசியல் சாஸனத்தின் 29-வது ஷரத்து அளிக்கிறது.

கல்வி ஸ்தாபனங்களை அமைத்து நிர்வகிக்கவும்

[ 8-ம் பக்கம் பார்க்க ]

# வர்த்தகப் பயிர் சாகுபடிக்கான வாய்ப்புகள்

உணவு தான்ய உற்பத்தியை அதிகரிப்பதற்கு தற்போது அதிக முக்கியத்துவம் அளிக்கப்பட்டு வருகிறது. உணவு தான்ய உற்பத்தி விஷயத்தில் 1970-71-வாக்கில் நாடு தன்னிறைவு பெறவேண்டும்என்பதுகுறிக்கோளாக இருக்கிறது. புதிய அதிக விளைச்சல் ரக விதைகள் காரணமாக உணவு தான்ய சாகுபடியும் குடியானவனுக்குலாபகரமாக இருக்கிறது. இந்நிலை தொடர்ந்து நீடிக்குமானால், அந்நியச் செலாவணி நாட்டுக்குச் சம்பாதித்துத் தரக்கூடியதும், தொழில்துறைக்குத் தேவையான கச்சாப்பொருள்களை அளிக்கக்கூடியதுமான வர்த்தகப்பயிர் சாகுபடி பாதிக்கப்படலாம். நமது ஏற்றுமதி வர்த்தகத்தில் முக்கியமான இடம் வகிக்கும் சணல், பருத்தி, நிலக்கடலை, புகையிலை, அரக்கு, முந்திரி, வாசனைத்திரவியங்கள் முதலியன இன்னும் பலஆண்டுகளுக்கு இதே முக்கியத்துவம்வாய்ந்ததாக இருக்கும்.

பருத்தி போன்ற சில வகைப்பொருள்களை இறக்குமதி செய்வதைத் தவிர்த்து, ஏற்றுமதியை ஊக்குவிப்பதற்காக வர்த்தகப்பயிர்கள் சாகுபடிக்கான விசேஷ திட்டங்கள் உருவாக்கப்பட்டிருக்கின்றன. 1970-71-றோடு முடியும் ஐத்தாண்டுக்காலத்திற்குள் வர்த்தகப் பயிர்களின் உற்பத்தியை 23-லிருந்து 53-சதவிகிதம்வரை உயர்த்த வேண்டும் என்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது.

நல்ல விதைகள், உரம், பயிர் பாதுகாப்பு நடவடிக்கைகள் ஆகியவற்றைக்கையாண்டு ஏகரா உற்பத்தியை அதிகரிக்க வேண்டும் என்பதே புதிய திட்டத்தின் குறிக்கோளாக இருக்கிறது. குறுகியகால ரகங்களின் உபயோகத்தை பரப்புவதுப் புதிய திட்டத்தின் மற்றொரு அம்சமாகும். 1966-லிருந்து ராஜ்ய அரசாங்கங்களின் திட்டங்களுடன் மத்திய அரசாங்கத்தின் ஆதரவுடன் கூடிய திட்டங்களும் அமல் செய்யப்பட்டு வருகின்றன. இத்திட்டங்கள் முக்கியவர்த்தகப் பயிர்களின் உற்பத்தியை அதிகரிக்கவேண்டும் என்பதையும், ஏகரா உற்பத்தியை உயர்த்த வேண்டும் என்பதையும், தரமான பொருள்களின் உற்பத்திக்கு வகைசெய்ய வேண்டும்என்பதையும் குறிக்கோளாகக் கொண்டுள்ளன.

அந்நியச் செலாவணியைச் சம்பாதித்துத் தரும் விஷயத்தில் சணல் முதலிடம் வகிக்கிறது. இரண்டாவது பெரிய தொழிலான சணல் தொழில்துறையில் 2½ லட்சத்திற்கும் அதிகமான ஊழியர்கள் ஈடுபட்டிருக்கிறார்கள். இந்தியா, பாகிஸ்தான் பிரிவினையின் போது சணல் உற்பத்திப் பகுதியில் 79 சதவிகிதம் பாகிஸ்தானுக்குச் சென்றுவிட்டது. சணல் தொழிற்சாலையில் பெரும்பாலானவை இந்தியாவில் இருந்தன. இதன் காரணமாக சணல் உற்பத்தியை அதிகரிப்பதற்காக எல்லாவிதமானமுயற்சிகளையும் மேற்கொள்ளும் படி ஆயிற்று. சணல் உற்பத்தி செய்யப்பட்டு வந்த பகுதி 23 லட்சம் ஏகராவிலிருந்து 26 லட்சம்ஏகராவாகஉயர்ந்தது. ஏகரா உற்பத்தியும் 2.40 பொதியிலிருந்து 2.49 பொதியாக அதிகரித்தது. சுமார் 9 லட்சம் ஏகராவில் இருபோகச் சாகுபடியை கொண்டுவரவேண்டும்என்பதும், அதிகவிளைச்சல் ரகங்களை உபயோகத்திற்குக் கொண்டுவரவேண்டும்என்பதும் புதிய திட்டத்தின் குறிக்கோளாக இருந்தது. சணல் உற்பத்தியை 1970-71-வாக்கில் 110 லட்சம் பொதிகளாக உயர்த்த வேண்டும் என்பது குறியளவு. 1967-68-ல் சணல் உற்பத்தியின் அளவு 75 லட்சம் பொதிகளாக இருந்தது என்று கணக்கிடப்பட்டிருக்கிறது.

ஏற்றுமதி செய்யப்படும் சணலின் தரத்தை உயர்த்துவதற்காக சணலைப் பக்குவப்படுத்துவதற்கான வசதிகளை ஏற்பாடுசெய்ய உற்பத்தியாளர்களுக்கு மான்ய உதவியும், கடனுதவியும் அளிக்கப்படுகிறது யூரியாவை தகுந்த முறையில் உபயோகிப்பதனால் சணலிலிருந்து கிடைக்கக்கூடியநூல் அதிகமாக இருக்கும்என்று கல்கத்தாவிலுள்ள மத்திய சணல் ஆராய்ச்சிக் கழகம் நிரூபித்திருக்கிறது. இதையொட்டி மத்திய அரசாங்கம் யூரியாவை இலவசமாக சப்ளை செய்வதற்காகவும், யூரியாவைத் தெளிப்பதற்கான கருவிகளை மலிவு விலையில் விநியோகிப்பதற்காகவும், நிதிவசதி அளித்திருக்கிறது. 1967-68-ல் சுமார் இரண்டு லட்சத்து 80ஆயிரம்ஏகராக்களில் யூரியா தெளிக்கப்பட்டது. 1968-69-ல் நாலரை லட்சம் ஏகராவில் யூரியா உபயோகப்படுத்த வேண்டும் என்பது குறியளவாக நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. ஒரிஸ்ஸாவில் புதிதாக பாசன வசதி ஏற்பட்டுள்ள பகுதிகளில் சணல் சாகுபடி செய்வதற்காகவும், திட்டமொன்று வகுக்கப்பட்டிருக்கிறது. இத்திட்டத்திற்கு 1968-69-ல் மத்திய அரசாங்கத்தின் நிதி உதவி கிடைக்கும்.

இந்தியாவிலேயே பெரிய தொழிலான ஜவுளித் தொழில் துறைக்குத் தேவையான பருத்தியை சப்ளை செய்வது பிரத்யேக முக்கியத்துவம் வாய்ந்ததாகும். கச்சாப் பருத்தி ஏற்றுமதியும், ஜவுளி ஏற்றுமதியும் ஆண்டு ஒன்றுக்கு ரூ. 70 கோடியிலிருந்து ரூ. 85 கோடி வரை அந்நியச் செலாவணியை சம்பாதித்துத் தருகின்றன என்பதும், இத்துறையில் ஆண்டு உற்பத்தி சுமார் ரூ. 600 கோடியாக இருக்கிறது என்பதும் குறிப்பிடத்தக்கது. இந்தியா, குட்டை ரகப் பருத்தியை ஏற்றுமதி செய்கிறது. ஆனால் ஆண்டொன்றுக்கு சுமார் 8 லட்சம் பொதி வரை நீண்ட ரகப் பருத்தியை இறக்குமதி செய்கிறது.

தீவிரச் சாகுபடி முறைகளை மேற்கொண்டதன் காரணமாக முதல் ஐந்தாண்டு திட்ட முடிவின்போது 83 ராத்தலாக இருந்த ஏகரா உற்பத்தி மூன்றாவது ஐந்தாண்டு திட்ட முடிவில் 104 ராத்தலாக உயர்ந்திருக்கிறது. பருத்தி, உற்பத்தி 1950-51-ல் 37 லட்சம் பொதிகளாக இருந்தது. 1965-66-47 லட்சம் பொதி

[ 7-ம் பக்கம் பார்க்க ]

# அமெரிக்க வரலாறு, இலக்கியத்தின் சார்புநிலை

வரலாறும் இலக்கியமும் ஒன்றுக்கொன்று துணையானவை. ஒன்றையொன்று வளப்படுத்துகிறது. எப்படி? அமெரிக்க நிபுணர்களும் இந்திய நிபுணர்களும் கலந்து கொண்ட இரண்டு நாள் உரைக்கோவையொன்றில் இது விளக்கப்பட்டது.

பேராசிரியர் டாக்டர் ரிச்சர்டு என். கர்ரன் நு வட கரோலினப் பல்கலைக்கழகத்து வரலாற்றுப் பேராசிரியர். டாக்டர் ஹெர்பர்ட் ஆர். பிரவின் மெயின் மாநிலத்தில் பிரான்ஸ்விக் நகரில் இருக்கும் பௌடுயின் கல்லூரியில் அமெரிக்க இலக்கியப் பேராசிரியராக இருக்கிறார். புகழ் பெற்ற இந்த இரண்டு அமெரிக்கப் பேராசிரியர்கள் உரைக்கோவையில் முக்கிய பேச்சாளராக இருந்தனர். ஹைதராபாத்தில் இருக்கும் அமெரிக்கப் படிப்பு ஆராய்ச்சி நிலையத்தில் (ஏ. எஸ். ஆர். ஸி.) இருக்கும் ஆராய்ச்சி நிபுணர்கள் ஊஸ்மானியா, ஆந்திரா, மைசூர், பெங்களூர் பல்கலைக்கழகங்களைச் சேர்ந்த பேராசிரியர் உள்ளிட்டு இந்திய அறிஞர்கள் பலர் இதில் கலந்து கொண்டனர்.

ஏ. எஸ். ஆர். ஸி. -யும் ஹைதராபாத்தில் இருக்கும் அமெரிக்கப் பண்பாட்டு நிலையமும் கூட்டாக இந்த உரைக்கோவைக்கு ஏற்பாடு செய்தன.

'அமெரிக்க அரசியல் சிந்தனையின் அடிப்படைக் கொள்கைகள்' என்ற பொருள் பற்றி டாக்டர் கர்ரன்ட் உரை நிகழ்த்தினார். பெரும்பாலான அமெரிக்கர் ஒப்புக் கொள்ளும் மூன்று கொள்கைகளை அவர் குறிப்பிட்டார். சுதந்திரப் பிரகடனத்தில் விளக்கப்பட்டுள்ள இலட்சியங்களைக் கொண்டது முதல் கொள்கை. மக்களின் பொது நலனை வளர்ப்பது தான் அரசாங்கத்தின் பணி என்ற நம்பிக்கை இரண்டாவது கொள்கை, மூன்றாவது கொள்கை கூட்டு நடவடிக்கை மூலம் அமைதியை உறுதி செய்வது.

இந்த அடிப்படை அரசியல் நம்பிக்கைகளை அமெரிக்கர்கள் ஏற்றிருப்பது தான் அமெரிக்காவின் இரு கட்சி முறை செயலாற்றுவதற்கு முக்கிய காரணமாக இருக்கிறது. ஜனாதிபதி பதவிக்கு நிற்கும் வேட்பாளர் ஒருவர் இந்த அடிப்படைக் கொள்கைகளை எதிர்த்தால் அவர் வாக்காளர்களிடம் படுதோல்வி அடையக் கூடும் என்பதை அவர் விளக்கினார்.

அமெரிக்க அரசியல் சிந்தனையில், ஜெஃபர்ஸன், ஹாமில்ட்டன் தத்துவங்கள் எவ்வாறு தோன்றி வளரலாயின என்பதை இந்த அமெரிக்க வரலாற்றறிஞர் துவக்கத்தில் விளக்கினார். ஜெஃபர்ஸன் சுதந்திரத்தை ஆதரித்து வந்தவர்; ஹாமில்ட்டன் சட்டம் ஒழுங்கு பாதுகாப்பு ஆகியவற்றில் பற்றுமிக்கவர். இவ்விருவருடைய கொள்கைகளும் எவ்வாறு இணைந்து இரண்டு முக்கிய அரசியல் கட்சிகளாக, ஜனநாயகக் கட்சி என்றும், குடியரசுக் கட்சி என்றும், உருவாகின என்பதை அவர் விளக்கினார். 20-வது நூற்றாண்டில் இவ்விரு கட்சியினரும் தம் பணிகள் சிலவற்றை மாற்றிக் கொண்டதையும் அவர் குறிப்பிட்டார். ஜனநாயகக் கட்சியினர் இப்பொழுது வலிமையுள்ள சுறுசுறுப்புமிக்க மத்திய அரசு ஒன்று இயங்குவதில் நம்பிக்கை கொண்டுள்ளனர்; குடியரசுக் கட்சியினர் மாநிலங்களின் உரிமைகளை ஆதரிப்பவர்கள். மத்திய அரசிடம் அதிகாரம் குவிந்திருக்கக்கூடாதென்று நம்புகிறவர்கள் என்றார்.

ஏ. எஸ். ஆர். ஸி. டைரக்டர் டாக்டர் வில்லியம் முல்டர் வரலாறும் இலக்கியமும் ஒன்றுக்கொன்று துணையாக இருந்து வருவதை வலியுறுத்தினார். இலக்கியம் போதிக்கும் ஆசிரியர் ஒருவர் வரலாறு பாடத்தை அசட்டை செய்தல் அது அவருக்கே தீங்காகும் என்று கூறினார். அதே மாதிரிதான் வரலாறு போதிக்கும் ஆசிரியர் இலக்கியத்தை அலட்சியம் செய்தாலும், என்றார். பெடரலிஸ்டு பேப்பர்ஸ், பெஞ்சமின் ஃபிராங்க்ளின் சுயசரிதை, சட்ட மறுப்பு பற்றி தோரோவின் கட்டுரை, ஜனாதிபதிகள் ஜெஃபர்ஸன், லிங்கன், வூட்ரோ வில்ஸன், கென்னடி ஆகியோரின் செய்திகள் முதலியன வரலாற்று முக்கியமும் பெற்றவை, இலக்கிய மணம் செறிந்தவை என்று அவர் கூறினார். சில நாவல்கள் எப்படி அமெரிக்க அரசியலில் பெரும் செல்வாக்கு பெற்றன என்பதையும் டாக்டர் முல்டர் விளக்கினார்.

டாக்டர் பிரவுன் அமெரிக்க இலக்கியம் பற்றி உரை நிகழ்த்துகையில், அமெரிக்க இலக்கியப் படிப்பு தீவிரமாகவும் இடையறாமல் தொடங்கப்பெற்றது 60 ஆண்டுகளுக்கு முன்பு தான் என்றார். அதற்கு முன்பு ஒருசில அறிஞர்கள் தான் அதில் தீவிர கவனம் செலுத்தி வந்தனர் என்றார். ஆங்கில இலக்கியத்தின் ஒரு சிறு கிளையாகவே அமெரிக்க இலக்கியம் மதிக்கப் பெற்று வந்தது தான் காரணம் என்று கூறினார். ஹார்வார்டு, யேல் பல்கலைக்கழகங்களிலும் கூட, ஆங்கில இலக்கியப் படிப்புக்குத் தான் மிகுந்த ஆதரவு இருந்து வந்தது என்றும் பண்பாட்டுத் துறையில் பொதுவாக இருந்து வந்த தாழ்வு மனப்பான்மை தான் இதற்குக் காரணம் என்று டாக்டர் பிரவுன் விளக்கினார்.

வாஷிங்டன் இர்விங், ரால்ஃப் வால்டோ எமர்ஸன், ஆகியோரின் வாழ்க்கை வரலாறுகள் அண்மைக் காலம் வரை எழுதப்பெறவில்லை. போ, மெல்வில், ஹாதார்ன், தோரோ, ஆகியோரின் இலக்கியப் படைப்புகள் 20-ம் நூற்றாண்டில் தான் புது மதிப்பு பெற்று புதுக் கருத்தோடு ஊன்றிப் படிக்கப் பெற்றன. எடுத்துக்காட்டாக, மெல்வில் வாழ்ந்த காலத்தில், கடலில் நிகழ்ந்த வீரச் செயல்களைப் பற்றி எழுதும் சாதாரண எழுத்தாளராக மட்டுமே மதிப்

[ 4-ம் பக்கம் பார்க்க ]





| | | |
|---|---|---|
| ஞ : 33 | ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும் | 1968 |
| இதழ் : 11 | தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே | பிப்ரவரி: 4 |



# சென்று வருக.

செந்தமிழ்த் தாய்பெற்ற இளந்தலைமுறைச் செல்வங்களே, மாணவ மணிகளே! நாளை உங்கள் கல்விச் சாலைகள் உங்களை ஆவலோடு வரவேற்கின்றன. காணாமற்போன மதலையைக் கண்டு மகிழும் தாயைப்போன்ற ஆசிரியர்கள் மிகுந்த ஆவலோடு உங்களை வரவேற்கிறார்கள். தாயைப் பிரிந்து தடம் மாறிப்போன கன்றைப் போல இருந்த நீங்களும் ஆசையோடு உங்கள் அறிவுக்கோயிலை நாளை அடைகிறீர்கள்.

மாணவர்களாகிய உங்கள் உணர்ச்சியை வெளியிட்டது போதும். மற்ற காரியங்களைப் பெரியவர்கள் பார்த்துக்கொள்வார்கள். அவர்கள் மேற்கொண்ட லட்சியம் உங்கள் விருப்பத்தை நிறைவேற்றும் பெரிய லட்சியம் என்பதை நீங்கள் தெளிவாகத் தெரிந்துகொண்டுவிட்டீர்கள். இனி உங்கள் கல்வியைத் தவிர அரசியல் மொழிப்பிரச்னையில் மறுபடியும் உங்கள் உணர்ச்சியைப் பயன்படுத்தக்கூடாது. ஒவ்வொரு கட்டத்திலும் என்னவாயிற்று என்றோ, அப்படி ஆகவேண்டும் இப்படி ஆகவேண்டுமென்றோ பிடிவாதம்செய்து உங்களை மறுபடியும் கெடுத்துக்கொண்டுவிடாதீர்கள். அதனால் உங்கள் சார்பாகப் பொறுப்பேற்றுக்கொண்டுள்ள தலைவர்களுக்குச் சிக்கலையும் தொல்லையையும்தான் உண்டாக்க முடியுமே தவிர, சிக்கலைத் தீர்க்க உதவி செய்வதாக ஆகாது.

மாணவர்களே, நீங்கள் என்றுமே மாணவர்களாக இருக்கப்போவதில்லை. விரைவில் பாடசாலையைவிட்டு வெளியேறி வாழ்க்கையென்னும் புலி பசியால் வாயைப் பிளந்து கொண்டு நிற்கிறதே அதன் வாயில் புகுந்து புறப்படுவதற்கு. உங்களுடைய திறமையையும் தகுதியையும் பெற்றாகவேண்டியவர்கள். மாணவ வாழ்வில் நீங்கள் பெறக்கூடிய அந்தத் தகுதியைப் பெறாமல் வீணாக்கிக்கொண்டுவிட்டால், பின்னால் மனிதர்களாக வாழும் வாய்ப்பு குன்றிப்போகும். குன்றிய தகுதியும் குறைபட்ட திறமையும்கொண்ட பெரியவர்களாக நீங்கள் இந்த நாடுமுழுதிலும் நிறையும் அடுத்த பத்துஆண்டுக் காலத்தில் இந்த நாட்டை நீங்கள்ஆள இயலாமற்போய்விடும். இளமை வீணாகிவிட்டதே என்று பின்னால் வருந்திப் பயன் இல்லை. எனவே, உங்கள் கல்வியைப் பெரிதாக எண்ணுங்கள். பெரியவர்களான இன்றைய மூத்தத் தலைமுறையின்பால் பாரத்தைப் போட்டுவிட்டு சிறந்த குடிமக்களாகத் தயாராகுங்கள். பள்ளிக்குச்சென்று படித்து முன்னுக்குவாருங்கள். உங்களில் ஒருசில உணர்ச்சி வயப்பட்ட மூத்த மாணவர்கள் இருப்பார்கள். அவர்களையும் சாந்தப்படுத்தி உங்களுடன் இணைத்துக் கொள்ளுங்கள். அவர்களின் வழியே நீங்கள் சென்று விடாதீர்கள். தமிழ் வாழும், தமிழ்நாடும் வாழும், பாரதம் வாழும் பாரகமும் வாழும்.

# துப்பு துலக்கும் கைரேகை

கொலை கொள்ளை வழக்குகளில் ஈடுபட்டிருப்பவர்களை அவர்களது கைரேகையே காட்டிக் கொடுத்து விடுகிறது. கைரேகையின் உதவியால் குற்றவாளிகளைக் கண்டுபிடிக்கும் முறை எப்படி ஏற்பட்டது? இந்தியாவில் இன்றும் உள்ள ‘இடக்கைப் பெருவிரல்’ பழக்கம்தான் இதற்கு ஆதாரமாக இருக்கிறது.

லண்டனிலுள்ள புகழ் பெற்ற ‘ஸ்காட்லாந்து யார்டு’ போலீஸார் முதன் முதலில் 1901-ம் ஆண்டில் தான் ‘கைரேகைப் பிரிவு’ ஒன்றை ஏற்படுத்தினர். அதற்கு முன்பெல்லாம் ஒரு மனிதன் அங்க அடையாளங்கள், உயரம், பருமன் போன்றவற்றை வைத்துக் கொண்டு குற்றவாளிகளைப் பிடித்து வந்தனர். ஆனால், இம்முறையில் சரியான குற்றவாளி தப்பிவிடுவதும் அப்பாவிகள் அகப்பட்டுக் கொண்டு தண்டனைக்காளாவதும் உண்டு.

அப்போது வங்காளத்தில் ஸர்ஹென்றி என்பவர் தலைமைப் போலீஸ் அதிகாரியாக பணியாற்றி வந்தார். இவர் லண்டனுக்குத் திரும்பியதும் இந்த கைரேகை பற்றி கருத்துத் தெரிவித்தார். இந்தியாவில் அப்போதே இருந்துவந்த ‘கைமுத்திரை’ப் பழக்கத்தை - அதாவது கையெழுத்துப் போடத் தெரியாதவர்கள் இடது கைப்பெருவிரலால் முத்திரை வைக்கும் பழக்கத்தை ஆதாரமாகக் கொண்டு அதே முறையில் குற்றவாளிகளைக் கண்டுபிடிக்கலாம் என்று கருத்துத் தெரிவித்தார் இவர். அதே நேரத்தில் ஒரு கொள்ளை வழக்கில் சந்தேகத்திற்கு ஆளான இருவரில் இரட்டைப் பிறப்பான இவர்கள் இருவரும் சகோதரர்கள்-உண்மைக் குற்றவாளி யார் என்று கண்டுபிடிக்க முடியாமல் தவித்தனர் லண்டன் போலீஸார். ஸர் ஹென்றியின் யோசனைப்படி இருவரின் கைரேகையையும் எடுத்து பரிசோதனை செய்தபிறகு உண்மைக் குற்றவாளியைக் கண்டுபிடித்தனர். இதில் தொடங்கிய இந்த முறை, இப்போது உலகெங்கும் பரவியிருக்கிறது.

‘ஸ்காட்லாந்து யார்டு’ போலீஸார் தினந்தோறும் ஏறத்தாழ 600 கைரேகை மாதிரிகள் சேர்க்கிறார்கள். மொத்தம் இந்த நிறுவனத்தில் 17 லட்சம் கைரேகை மாதிரிகள் வைக்கப்பட்டுள்ளன. இவை தவிர குற்றம் நடந்த இடம் மற்றும் வேறு பல தடயங்களைக்காட்டும் புகைப்படங்களையும் இவர்கள் சேகரித்து வைக்கின்றனர்.

——

[ 3-ம் பக்கத்தொடர் ]

மதிக்கப்பட்டு வந்தார் என்றார்.

எனவே இந்திய அறிஞர்களை நோக்கி டாக்டர் பிரவுன் சொன்னதாவது: ‘‘அமெரிக்க இலக்கியத்தில் உங்களுக்கு அறிமுகம் அண்மையில்தான் ஏற்பட்டது. என்று நீங்கள் நினைப்பதானால், நாங்களும் அப்படியேதான் என்று நான் கூறுவேன்’’. ஒவ்வொரு உரைக்குப் பிறகும் விறுவிறுப்பான விவாதம் நடந்தது. அமெரிக்கப் பண்பாட்டு நிலையத்து டைரக்டர் ரிச்சர்டு வான் கிளாட்ஸ் வரவேற்புரை நிகழ்த்தினார்.

——

# கடலிலிருந்து குடிநீர்

குடிநீர் தேவை பெருகப் பெருக கடல் நீரைக் குடிநீராக்கும் முறைபற்றி அதிகக் கவனம் செலுத்தப்படுகிறது. தண்ணீரை ஆவியாக்கி, ஆவியைக் குளிரச் செய்து, உப்பு நீங்கிய நல்ல நீர் பெறலாம் என்றாலும், பெருகிவரும் தேவைக்கேற்ப இம்முறை சிக்கனமானதல்ல.

உலகின் பல பாகங்களிலும் குடிநீர் பற்றாக்குறை உள்ளது. இங்கெல்லாம் பற்றாக்குறையைப் போக்கவும், நல்ல நீர் சிக்கனமாகக் கிடைக்கவும் புதிய முறைகள் மேற்கொள்ள வேண்டும். இம்முறைகளில் கடல் நீரிலிருந்து உப்பை நீக்கி குடிநீராக ஆக்கும் முறை முக்கியமானதாகும்.

தண்ணீரை ஆவியாக்கி குடிநீர் தயாரிக்கும் பழைய முறையிலிருந்து மாறுபட்டு, சிக்கனமான முறையில் அதிக அளவில் குடிநீர் பெரும் வழியை பிரிட்டனைச் சேர்ந்த இருவர் 9 ஆண்டுகளுக்கு முன் கண்டனர். இம்முறையில் படிப்படியாக சில முன்னேற்றங்கள் செய்யப்பட்டுள்ளன.

தண்ணீரிலிருந்து உப்பைப் பிரித்து எடுப்பது பற்றிய முதலாவது சர்வதேச கருத்தரங்கு 1965-ல் வாஷிங்டனில் நடைபெற்றது. இதில் பங்குகொண்ட பிரிட்டிஷ் தூதுக்குழு சில ஆலோசனைகளை முன்வைத்தது. இந்த ஆலோசனைகளின்படி, அணுசக்தியைப் பயன்படுத்தி, நீரில் உள்ள உப்புத் தன்மையை நீக்கி நல்ல குடிநீரையும், அதேசமயத்தில் குறைந்த செலவில் மின்சக்தியையும் பெற முடியும். அதாவது ஒரே முயற்சியில் இரு நன்மைகள் அடைய முடியும்.

இம்முறையில் வழிகாட்டியாயிருப்பதுடன், இதற்குத் தேவையான எந்திரங்கள் உற்பத்தி செய்வதிலும் பிரிட்டன் முன்னணியில் நிற்கிறது. தேவைப்படும் எந்திரங்களில் பாதிக்கு மேல் ஸ்காட்லாந்தில் உள்ள ஒரு நிறுவனம் தயாரிக்கிறது. குவெட்டாரில் இரண்டு இடங்களில் இதுபோன்ற கூடங்கள் அமைக்க இந்த நிறுவனமும் ஒப்பந்தம் செய்துகொண்டிருக்கிறது. உப்பு நீரை கொதிநிலை அளவுக்கும் குறைந்த அழுத்தத்தில் காய்ச்சி, பிறகு பல்வேறு கட்டங்களில் படிப்படியாக நீராவியாக்கப்படுகிறது. கடைசியில் இந்த ஆவி குளிர்ந்து நல்ல நீர் கிடைக்கிறது. இதற்கான எந்திரங்களை இந்த நிறுவனம் அனுப்பும். உலகின் பல பாகங்களிலும் உள்ள உப்பு நீருக்கும் எந்திரங்களில் ஏறத்தாழ 75 சதவிகிதம் 'வேயர் வெஸ்ட்கார்' (Weir Westgarth) என்ற இந்த பிரிட்டிஷ் நிறுவனம் தயாரித்து அனுப்பியவையாகும்.

இந்த நிறுவனம் ஸ்காட்லாந்தில் 3 லட்சம் பவுன்கள் செலவில் புதிய ஆராய்ச்சிக்கூடம் ஒன்று நிறுவியுள்ளது. உலகிலேயே தலையாயதாகக் கருதப்படும் இந்த ஆராய்ச்சிக்கூடம் நாள் ஒன்றுக்கு ஒரு கோடி காலன் குடிநீர் தயாரிப்பது பற்றி ஆராயும். பிரிட்டிஷ் அணுசக்தி நிலையத்தின் கூட்டுறவுடன் பணியாற்றும் இந்த ஆராய்ச்சிக்கூடம் இப்போது உள்ளதைவிட இன்னமும் சிக்கனமான செலவில் குடிநீர் பெறுவதற்கான வழிமுறைகளை காண்பதையே நோக்கமாகக்கொண்டுள்ளது.

—

# புதிய ரயில் எஞ்சின்

மணிக்கு 130 மைல் செல்லக்கூடிய புதிய ரயில் எஞ்சின் ஒன்று பிரிட்டனில் தயாரிக்கப்பட்டுள்ளது. இதுவரை இவ்வளவு வேகமாக செல்லக்கூடிய எஞ்சின் பிரிட்டனில் தயாரானது இல்லை. இப்போதுள்ள நிலையில் மணிக்கு 126 மைல் செல்லும் நீராவி எஞ்சின் தான் சிறந்ததாகக் கருதப்பட்டு வருகிறது. இதைவிட வேகமாகச் செல்லும் இந்தப் புதிய எஞ்சின் ஒரு சாதனை ஏற்படுத்தியுள்ளது.

இரண்டரை ஆண்டுகால இடைவிடாத முயற்சியின் பயனாக இந்தச் சாதனை புரிந்துள்ளது பிரிட்டிஷ் நிறுவனம் ஒன்று. இன்னும் சில மாறுதல்கள் செய்து இதையே மணிக்கு 150 மைல்கள் வரை செலுத்தலாம்.

126 டன் எடையுள்ள இந்தப் புதிய எஞ்சின் 4,000 குதிரை விசை உள்ளது. ஆகாய விமானம் கட்டும் தொழில்நுட்ப முறைகளைக் கையாண்டு உருவாக்கப்பட்டுள்ள இந்த எஞ்சினில் 'கம்ப்யூடர்' பொருத்தப்பட்டுள்ளது. டிரைவரின் பல வேலைகளை இந்த 'கம்ப்யூடர்' கவனித்துக்கொள்கிறது. வண்டியை நிறுத்த 'பிரேக்' போடுவதிலிருந்து இயந்திரத்தில் ஏற்படக் கூடிய பழுதுகளைக் கண்டறியவும், இவற்றால் ஆபத்து ஏதும் ஏற்படாமல் தடுப்பது வரை அநேக வேலைகளை இந்த 'கம்ப்யூடர்'கள் செய்கின்றன. ரயில் பாதையில் இருந்து சக்கரங்கள் கள் நழுவாமலும் இது தடுக்கிறது. 15 வண்டித் தொடர்களை இழுத்துச் செல்லக்கூடிய இந்த எஞ்சினில் மூன்று வகையான 'பிரேக்'குகள் பொருத்தப்பட்டுள்ளன.

இவ்வளவு வசதிகள் இருப்பதோடு, இந்த எஞ்சினுக்காகும் பராமரிப்புச் செலவோ மிகவும் குறைவு. இதன் விலை 175,000 பவுன்கள் என்று நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

பரீட்சார்த்தமுறையில் இந்தப் புதிய எஞ்சின் லண்டனில் ஓட்டப்பட்டது ரஷ்யா, செக்கோஸ்லோவேகியா, ஆஸ்திரேலியா நாட்டு வர்த்தகப் பிரதிநிதிகள் அப்போது பயணம் செய்தனர்.

——

# தானிய சேமிப்பு

தானியங்களை கோணிப் பைகளில் கட்டி சேமிப்புக் கிடங்குகளில் வைக்கும் முறை கையாளுவதற்கு சங்கடமாக இருப்பதுடன் அதிக இடத்தை அடைத்துக்கொள்ளும். இதற்காக எஃகுத்தகடுகளால் செய்யப்பட்ட சதுர 'டிரம்'களில் தானியங்களைச் சேமித்து வைக்கும் முயற்சி பிரிட்டனில் மேற்கொள்ளப்படுகிறது.

ஒரு டன் கொள் அளவு உள்ள இந்த 'டிரம்'களில் தானியம் சேமித்து வைப்பதால் குறிப்பிட்ட ஒரு கிடங்கில் கோணிகளில் வைப்பதைப்போல இருமடங்கு தானியத்தை சேமிக்க முடிகிறது. எலித்தொல்லைகளால் தானியம் நாசமாகாதது மற்றொரு சௌகரியம்.

# புதிய போர் விமானம்

பிரிட்டிஷ் விமானப் படையின் உபயோகத்துக்காக உருவாக்கப்பட்ட 'ஹாக்கர் ஸிட்ஸி ஹாரியர்' என்ற புதிய ஜெட் விமானம் (ஜனவரி 4) இயக்கப்பட்டது. இருந்த நிலையில் செங்குத்தாகப் புறப்பட்டு உயரே கிளம்புவது இதன் சிறப்பு அம்சமாகும். ஒலியின் வேகத்தில் பறக்கக் கூடிய இந்த ஜெட் ஒற்றை என்ஜின் பொருத்தப்பட்டது. ஒரே முறையில் 2,000 மைல்கள் வரை செல்லும் இந்த விமானத்தில், பறக்கும்போதே எரிபொருள் நிரப்பிக் கொள்ளும் வசதியும் உள்ளது. ஓட்டப் பாதை வசதிகள் இல்லாத இடங்களிலும் இந்த ஜெட் இயங்கக்கூடியது. செங்குத்தாகக் கிளம்பும் சிறப்பு அம்சம் இருப்பதால் போர்க் கப்பல்களில் எளிதாகப் பயன்படுத்த முடிகிறது.

பல சிறப்பு அம்சங்கள் பொருந்தியிருக்கும் இது போன்ற 60 விமானங்கள் வாங்க, பிரிட்டிஷ் விமானப் படை முன்வந்துள்ளது.



# 39 லட்சம் பவுன்கள் மதிப்புள்ள விமானங்கள்

சென்ற ஆண்டு முதல் 11 மாதங்களில் பிரிட்டனிலிருந்து இந்தியா வாங்கியுள்ள விமானங்கள் மற்றும் உதிரி உறுப்புக்களின் மதிப்பு 3,911,000 பவுன்களாகும்.

இந்தத்துறையில் சென்ற ஆண்டு பிரிட்டன் மொத்தம் 169 மிலியன் பவுன்கள் மதிப்புள்ள விமானங்கள் மற்றும் உதிரி உறுப்புக்களை உலகின் பல பாகங்களுக்கும் ஏற்றுமதி செய்துள்ளது. பிரிட்டனிலிருந்து அதிக அளவில் இறக்குமதி செய்த நாடுகளில் இந்தியாவும் ஒன்று.

மொத்த ஏற்றுமதியில் விமான எஞ்சின்களின் மதிப்பு மட்டும் 76 மிலியன் பவுன்கள். கடந்த ஐந்து ஆண்டுகளில் இவ்வளவு அதிக அளவில் விமான எஞ்சின்கள் ஏற்றுமதியானதில்லை.





[ 2-ம் பக்கத் தொடர்ச்சி ]

களாக அதிகரித்தது. 1970-71-வாக்கில், பாசன வசதி உள்ள இடங்களில் தீவிரச் சாகுபடி முறைகளை சுமார் 40 லட்சம் ஏகராக்களுக்கு விஸ்தரித்து, பருத்தி உற்பத்தியை 79 லட்சம் பொதிகளாக உயர்த்தவேண்டும். என்பது குறியளவாக நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. 1967-68-ல் பருத்தி உற்பத்தி 65 லட்சம் பொதிகளாக இருந்தது என்று கணக்கிடப்பட்டிருக்கிறது. பருத்தி சாகுபடி முறைகளை நவீனமாக்கி ஏக்கரா உற்பத்தியை தற்போது அளவு 161 ராத்தலாக உயர்த்தவேண்டும் என்பது முயற்சியாக இருக்கிறது.

எண்ணெய் வித்துக்களை உற்பத்தி செய்யும் பெரிய நாடாக இந்தியா இருப்பினும், தனி மனிதனுக்குத் தேவைப்படும் எண்ணெய் சத்தில் 5-ல் ஒரு பங்குதான் இந்தியா அளிக்க முடிகிறது. எண்ணெய் சத்துக்களுக்கான தேவை கணிசமாக அதிகரித்திருப்பதனால் விலைவாசிகள் அதிகமானதோடு, ஓரளவுக்கு இறக்குமதியும் செய்யவேண்டியிருக்கிறது.

எண்ணெய்வித்துக்களின் உற்பத்தியை 58 சதவிகிதம் உயர்த்தவேண்டும் என்று திட்டமிடப்பட்டிருக்கிறது. அதாவது, தற்போது 75 லட்சம் டன்னாக இருக்கும் எண்ணெய் வித்துக்களின் உற்பத்தியை 1970-71 வாக்கில் 14 லட்சம் டன்னாக உயர்த்த வேண்டும் என்பது குறியளவு.

நிலக்கடலை உற்பத்தி கணிசமாக அதிகரித்திருக்கிறது. 1965-66ல் 45 லட்சம் டன்னாக இருந்த நிலக்கடலை உற்பத்தி 1967-68ல் 65 லட்சம் டன்னாக அதிகரித்திருக்கிறது. நிலக்கடலை உற்பத்தியை ஊக்குவிப்பதற்கும், அதன் ஏற்றுமதியை அபிவிருத்தி செய்வதற்கும் மத்தய அரசாங்கத்தின் ஆதரவுடன் கூடிய திட்டமொன்று 1967-68-ல் ஒன்பது லட்சம் ஏகராவில் அமுலில் இருந்தது. இத்திட்டத்தை 1968-69ல் 25 லட்சம் ஏகராக்களுக்கு விஸ்தரிக்கப்படவேண்டும் என்று உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. நிலக்கடலைப் பிண்ணாக்கின் ஏற்றுமதி மூலம் கணிசமான அளவுக்கு அந்நியச் செலாவணி கிடைக்கிறது. 1967-68ல் ரூ. 78 கோடி அளவுக்கு அந்நியச் செலாவணி கிடைக்கிறது. 1967-68ல் ரூ. 78 கோடி அளவுக்கு நிலக்கடலைப் பிண்ணாக்கு ஏற்றுமதி செய்யப்பட்டிருக்கும் என்று கணக்கிடப்பட்டிருக்கிறது. இந்த ஏற்றுமதி 1964-65ல் ரூ. 35 கோடியாகவும், 1965-66ல் ரூ. 29 கோடியாகவும், 1966-67ல் ரூ 38 கோடியாகவும் இருந்தது.

புகையிலை இந்தியாவில் 10 லட்சம் ஏக்கருக்கும் அதிகமான பகுதியில் பயிரிடப்படுகிறது. புகையிலை சாகுபடி மூலம் கிடைக்கும் மொத்த வருமானம் ரூ. 50-லிருந்து ரூ 55 கோடியாக இருக்கிறது. வர்ஜீனியா ரகப் புகையிலை முக்கியமாக ஏற்றுமதி செய்யப்படுகிறது. புகையிலை ஏற்றுமதி மூலம் 1967-67-ல் ரூ 31·5 கோடி கிடைத்தது. அதற்கு முந்தைய ஆண்டு ரூ.16 கோடி வருமானமாகக் கிடைத்தது. புகையிலை ஏற்றுமதியில் கிடைக்கும் வருமானத்தில் 90 சதவிகிதம் வரையில் வர்ஜீனியா ரக புகையிலையின் ஏற்றுமதி மூலம் கிடைப்பதாகும். இந்த ரக புகையிலை ஆந்திரப் பிரதேஷ், மைசூர், தமிழ்நாடு ஆகிய இடங்களில் அபிவிருத்தி செய்வதற்காக மத்திய அரசாங்கத்தின் ஆதரவுடன் கூடிய திட்டமொன்று எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது, 1966-67-ல் புகையிலையின் உற்பத்தி 3½ லட்சம் டன்களாக இருந்தது. அதை 1970-71-ல் 4·2 லட்சம் டன்னாக உயர்த்தவேண்டும் என்பது குறியளவு.

உலக நாடுகளின் அரக்குத் தேவையை இதுவரையில் பூரணமாக பூர்த்தி செய்து வந்த இந்தியா தனது மார்க்கெட்டில் கிட்டத்தட்ட 40 சதவிகிதத்தை தாய்லண்டுக்கு இப்போது இழந்து விட்டது. இந்திய அரக்கைவிட தாய்லண்டு அரக்கு மலிவாக இருந்ததே இதற்குக் காரணமாகும். எனினும், ரூபாய் மதிப்புக் குறைப்பை அடுத்து நமது அரக்கு ஏற்றுமதி அதிகரித்திருக்கக்கூடும். அரக்கு உற்பத்தியை அதிகரிப்பதற்காக ராஜ்ய அரசாங்கத் திட்டங்களுடன் மத்திய அரசாங்கத்தின் ஆதர கூடிய திட்டங்களும் அமல் செய்யப்படும். அரக்கு உற்பத்தி, அபிவிருத்திக்கான ஒன்றிணைப்புத் திட்டத்தின் மூலம் ஆதிவாசி பகுதிகளைச் சேர்ந்த சுமார் 40 லட்சம் குடியானவர்கள் 1968-69ல் பயனடைவார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது,

பீஹார், ஒரிஸ்ஸா, மத்தியப்பிரதேஷ், மேற்கு வங்காளம், உத்திரப்பிரதேஷ் ஆகிய ராஜ்யங்களில் தெரிந்தெடுக்கப்பட்ட சிலசமுதாய நல திட்டத் தொகுதிகளில் அரக்கு உற்பத்தி அதிகரிப்பதற்கான இத்திட்டம் அமலாகும்.

உலக நாடுகளில் முந்திரிப் பருப்புக்கான தேவையில் கிட்டத்தட்ட 90 சதவிகிதத்தை இந்தியா பூர்த்தி செய்கிறது. 1966-67ல் இந்தியாவின் முந்திரி ஏற்றுமதியின் மதிப்பு ரூ. 42.89 கோடியாக இருந்தது. இது 1967-68-ல் ரூ. 46 50 கோடியாக உயரக்கூடும் என்று எதிர்பார்க்கப் படுகிறது. தரமான முந்திரியை உற்பத்தி செய்வதற்காகவும், முந்திரி உற்பத்தியை அதிகரிப்பதற்காகவும் மத்திய உதவி கிடைக்கிறது.

அதிகமான நிலப்பகுதியில் தென்னை மரங்கள் இருந்தும்கூட உள்நாட்டுத் தேவைக் கேற்ப தேங்காய் உற்பத்தி இல்லை. உள்நாட்டுத் தேவையை பூர்த்தி செய்வதற்காகக் கொப்பரை இறக்குமதி செய்யப்படுகிறது. தேங்காய் உற்பத்தியை அதிகரிப்பதற்காக உயர்ரகத் தென்னை சாகுபடிக்கான பண்ணை ஒன்றை மைசூரில் அமைப்பதற்கு மத்திய அரசாங்கம் உதவியிருக்கிறது. மைசூர், கேரளம், தமிழ்நாடு ஆந்திரப் பிரதேஷ் ஆகிய ராஜ்யங்களில் உயர்ரகத் தென்னை கன்றுகளின் உற்பத்தி, வினியோகம் ஆகியவற்றுக்கான திட்டங்களுக்கும் மத்திய அரசாங்கம் ஆதரவு அளித்திருக்கிறது. இந்தத் தீவிர முயற்சிகள் காரணமாக தேங்காய் உற்பத்தி 70 லட்சமாக உயருமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

மிளகு, மிளகாய், இஞ்சி, மஞ்சள், முதலியவை முக்கியமா... இந்திய வாசனைப் பொருள்களாகும். சோவியத் யூனியன், அமெரிக்கா, இடலி, கனடா, யூகோஸ்லாவியா, ருமேனியா ஆகிய நாடுகளுக்கு மிளகு ஏற்றுமதி செய்யப்படுகிறது. மிளகு ஏற்றுமதி மூலம் ரூ. 11·6 கோடி வருமானமும், மிளகாய் ஏற்றுமதி மூலம் ரூ. 2·8 கோடி வருமானமும் கிடைக்கிறது. உயர்ரக மிளகை அபிவிருத்திச் செய்வதற்கான குறுகியகால, நீண்டகால நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுகின்றன. கருப்பு மிளகை வெளுப்பு நிறமாக மாற்றுவதற்கான முறைகளை வகுத்து நிர்ணயம் செய்வதில் ஆராய்ச்சியாளர்கள் தற்போது ஈடுபட்டிருக்கிறார்கள். வெளுப்பு நிற மிளகுக்கு சமீப ஆண்டுகளில் நல்ல தேவை இருப்பதால் இந்நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது.

——

Regd No M. 3398 Phone No: 2848 Shivaji Tamil Weekly 4—2—1968

# சிறு தொழில்

சிறு கிளிப்பிலிருந்து சைக்கிள், அல்லது தையல் இயந்திரம் வரையிலும், டிரான்ஸிஸ்டரிலிருந்து மோட்டார் யந்திரம், விமானம் ஆகியவற்றுக்கான தற்கால கருவிகள் வரையிலும் ஏராளமான பொருள்கள் நம் நாட்டில் சிறுதொழில் பிரிவில் தயாரிக்கப்பட்டு வருகின்றன.

சிறுதொழில் பிரிவுகளில் இரண்டு பகுதிகள் இருக்கின்றன. — பதிவு செய்யப்பட்டவை, பதிவு செய்யப்படாதவை என்பன அவை. 1963-ல் சுமார் 59,000 பதிவுசெய்யப்பட்ட பிரிவுகள் இருந்தன. 1967-ல் இந்த எண்ணிக்கை 1,07,000-க்கும் மேல் உயர்ந்தது. நாட்டிலுள்ள தொழிற்சாலைகள் அனைத்தின் மொத்த உற்பத்தியில் சுமார் 36 சதவிகிதம் சிறு தொழில் துறையில் நடைபெற்று வருகிறது. கிட்டத்தட்ட 15 லட்சம் பேர் இந்தத் துறையில் பணியாற்றுகிறார்கள். எல்லா தொழிற்சாலைகளையும் சேர்த்து அவற்றில் வேலைபார்ப்பவர்களில் இவர்கள் மூன்றில் ஒரு பகுதியினர்.

மருத்துவ தர்மாமீட்டர்கள், ரிவட் ஆணிகள், குண்டூசி, கிளிப்புகள், அளவு நாடாக்கள், யந்திர விளையாட்டுச் சாமான்கள், கண்ணாடிச் சிமிழ்கள் ப்ளாஸ்டர் அட்டைகள், பென்சில் சீவும் கருவிகள், கொண்டை ஊசிகள், வரைபட வர்ணங்கள் போன்ற பொருள்கள் முழுவதும் சிறு தொழில் ஆலைகளே தயாரித்து வருகின்றன. மின்சார இஸ்திரிப் பெட்டிகள் முதலிய பொருள்களின் மொத்த உற்பத்தியில் கிட்டத்தட்ட பாதி சிறு தொழில் துறையில் நடைபெற்று வருகிறது.

யந்திர சாதனங்களாக ஏழரை லட்சம் ரூபாய் முதலீட்டுடன் கூடிய ஒரு தொழிற்சாலை இன்று சிறு தொழில் துறையைச் சேர்ந்தப் பிரிவாகவே கருதப்படுகிறது. துணைப்பொருள்கள் தயாரிப்புத் தொழிற்சாலை விஷயத்தில் முதலீடு 10 லட்சம் ரூபாய்க்கு உட்பட்டிருந்தால் அது சிறு தொழில் பிரிவாகக் கருதப்படும்.

இறக்குமதி கட்டுப்பாடிருந்ததாலும், உற்பத்தியைவிட தேவை அதிகமாக இருந்ததனாலும் இத்தியத் தொழில் துறைக்கு அண்மைக்காலம் வரையில் விற்பனையில் அதிக பிரச்னை ஏற்படவில்லை. சிறுதொழில் பிரிவுகளில் பெரும்பாலானவைக்கு விற்பனை செய்வது எளிதாக இருந்தது. ஆனால் நம் நாட்டு உற்பத்தித் திறனளவும் உற்பத்தியும் பெருமளவு விரிவாகி வந்ததனால் தேவைக்கும் உற்பத்திக்கும் இடையே இருந்த வேறுபாடு குறைந்துவிட்டிருக்கிறது. சிறுதொழில் பிரிவுகளுக்கிடையேயும் அவற்றுக்கும் பெரிய தொழிற்சாலைகளுக்கும் இடையேயும் போட்டி அதிகரித்தது, சிறுதொழில் பிரிவை மிகவும் பாதித்தது. இருந்தபோதிலும், சிறுதொழில் பிரிவுகள், அன்றாட உபயோகப் பொருள்களில் உற்பத்தியில் முக்கியப் பங்கு வகித்து வந்திருக்கின்றன.

சில பொருள்கள் விஷயத்தில் அநேகமாக உற்பத்தி முழுவதுமே சிறு தொழில் பிரிவில்தான் ஏற்பட்டு வருகிறது. பின்னப் பட்டபருத்தி, கம்பளி ஆடைகள், சலவை சோப்புகள், ரொட்டிப் பொருள்கள், தோல் காலணிகள் முதலிய பொருள்கள் முழுவதும் சிறு தொழில் பிரிவுகளே உற்பத்தி செய்கின்றன.

1962-63-ப் சப்ளை-பைசல் பிரிவு சிறுதொழில் துறையிடமிருந்து சுமார் 29.50 கோடி ரூபாய் மதிப்புக்கு பொருள்களை வாங்கியிருக்கிறது. 1957-58-ம் ஆண்டில் அது 2.63 கோடி ரூபாய் மதிப்புள்ள பொருள்களை வாங்கியது. சென்ற ஆண்டில் சிறுதொழில் பிரிவுகள் ரெயில்வே இலாகாவிடமிருந்து மட்டும் சுமார் 9.74 கோடி ரூபாய் மதிப்புக்கு ஒப்பந்தங்கள் பெற்றன.

தொழில்நுட்ப ரீதியில் பெரிய தொழிற்சாலைகளால் தான் தயாரிக்கமுடியும் என்கிற பொருள்களைத் தவிர உதாரணமாக இரும்பு, உருக்கு, ரப்பர் டயர்கள், காகிதம், சிமெண்ட், பெட்ரோலியம், ஆதார உலோகங்கள், மோட்டார்வாகனங்கள், கனரக ரசாயனப் பொருள்கள் முதலியவை தவிரமற்ற பொருள்களை உற்பத்தி செய்து உள்நாட்டுச் சந்தையில் தொழில் பிரிவுகள் மிகவும்நல்ல முறையில் இயங்கி வருகின்றன.

— —

[ 1-ம் பக்கத்தொடர்ச்சி ]

பிரஜைகளுக்கு உரிமை அளிக்கப்பட்டிருக்கிறது. இந்தியாவில், மதச்சார்பற்ற தன்மை என்பது வெறும் வரட்டுக் குறிக்கோளாக மட்டும் இருக்கவில்லை.

பிரதமர் ஸ்ரீமதி இந்திரா காந்தி கூறியபடி, "எல்லா மதங்களின் புனிதத் தன்மையை வலியுறுத்தவே நாம் மதச் சார்பின்மையை ஏற்றுக்கொண்டோமே தவிர, மதத்தை மறுப்பதற்காக இல்லை. மக்களுக்கு முழுச் சுதந்திரம் அளிப்பதற்காகவும், நாட்டு நடவடிக்கைகளில் மக்கள் அதிக அளவில் பங்குகொள்வதற்காகவும் ஜனநாயகத்தை நமது அரசியல் அடிப்படையாக நாம் தெரிந்தெடுத்தோம். சமத்துவம் என்பதை அரசியல் ரீதியான சொற்றொடராகக் கொள்ளாமல் கொள்கை அளவில் எல்லா மக்களுக்கும் பயன் தரத்தக்க முறையில் நிறைவேற்றுவதற்காக பொருளாதார அபிவிருத்திக்கு சோஷலிஸ பாதையை நாம் தேர்ந்தெடுத்தோம். சமூகத்தின் கீழ் மட்டத்தில் இருப்பவர்களை உயர்த்துவதற்கும், அவர்களுக்கு உதவி செய்வதற்கும் விசேஷ முக்கியத்துவம் தரப்பட்டது."

இந்திய அரசியல் சாஸனம் வகுத்த தடையற்ற சுதந்திரமுள்ள சமூகம், மக்களின் தேசிய அபிலாஷைகளுக்கு வலுவூட்டியிருக்கிறது. என்பது 18 ஆண்டுகாலமாக மதச் சார்பற்ற ஜனநாயகப் பாதையில் சென்றுகொண்டிருக்கும் நமக்குத் தெளிவாகிறது.

— —



Edited and Published by its owner Sri Triloka Sitaram & Printed by him at his Shivaji News Printers, 2-A, Fort Station Road, Tiruchy-2.
Annual Subscription Including 4 special numbers Rs. 10.